# அம்ருதலஹரீ
# நெ. 29

## September 01, 1940

Record no. 112

Regd. No. M. 3978. [விலை காலணா.

# "அம்ருதலஹரீ"

## கோயில் அநுபந்தம்

நெ. 29] ஸ்ரீரங்கம், 1—9—1940. [ஞாயிறு
விக்ரம-ஸு ஆவணி-மீ 17-உ

### அதிகாரிகள் அசிரத்தை காட்டினால்?

ஸ்ரீரங்கம் தேவஸ்தானத்தில் சிப்பந்திகள் ஏராளமாக இருக்கின்றார்கள் என்பதை அடிக்கடி யாம் தெரிவித்திருக்கிறோம். ஒவ்வொரு சிப்பந்திக்கும் சரியான வேலை இருக்கின்றதா என்பதைக்கூட பார்ப்பதாகத் தெரியவில்லை. ஏதோ ஒருவர்க்கு வேலை இருந்தாலும் அதை அவர்கள் சரியாகக் கவனித்து வருகிறார்களா என்பதையாவது கவனிக்கவேணும். அப்படி ஏதாவது கவ

னிக்க ஒரு சிப்பந்தியை நியமித்தால் உடனே அந்த சிப்பந்தியான வன் அதிகாரிக்கு அந்தரங்களை அமர்ந்து உல்லாஸமாக இருந்து அதிகாரிகளை வசப்படுத்திக்கொள்கிறுன். உடனே க்ரமமாய் அதிகாரிகளுக்கும் அவனிடம் அதிக ப்ரேமை உண்டாகி அவ னைக் கவனியாமலே விட்டுவிடுகிறுர்கள். இன்னும் சில கீழ்த் தரமான சிப்பந்திகளுக்கு அதிகாரிகளிடம் உண்மையை ரிப்போர் ட்டு செய்யவோ, நேரில் முறையிட்டுக்கொள்ளவோ முடியாமல் போய்விடுகிறது. அதிகாரிகளுக்குத் தகுந்தபடி சிப்பந்திகளோ, சிப்பந்திகளுக்குத் தகுந்தபடி அதிகாரிகளோ தகுந்த மரியாதை யோடு இருந்துவந்தால் அதிகாரிகள் எவர்கள் என்பது எவருக்கும் எளிதாய் தென்படும். எவரும் கண்டு பேசலாம்; அதிகாரிகளுக் கும் உண்மை எளிதில் புலப்படும். அதிகாரிகள் கவனிப்பு சிறிதும் இல்லாததினுல்தான் பலவித கஷ்டங்கள் நேரிடுகின்றது. எவ் வித காரணங்களைக்கொண்டும் எந்த பொது ஸ்தாபன அதிகாரியும் அடிக்கடி சிப்பந்திகளை தன்னுடன் சமமாக அமரவைத்து நேருக்கு நேராக அவர்களுடன் பேசுதல் ஒருசாலும் தகாது; தகாது. எப் பொழுதும் அதிகாரிகள் அப்படி சிப்பந்திகளுடன் பேசிக்கொண் டேயிருந்தால், கீழ் சிப்பந்திகள் தங்கள் குறைகளை எடுத்துச்சொல் லவோ, தக்க பரிகாரங்கள் தேடவோ, பொதுஜனங்கள் போய் பார்க்கவோ முடியாது; கௌரவமுமேற்படாது. எவர்கள் அதி கமாக நெருங்கி பழக்கமுள்ளவர்களாக யிருக்கிறுர்களோ, அன்ன வர்கள் விரோதமான காரியத்தையும் ஸ்ருஷ்டித்து விடுவார்கள்.

பொதுவாக அதிகாரிகள் கெடுவதே கேவலம் சிப்பந்தி களால்தான். எந்த சிப்பந்திகளிடத்தில் அதிகாரிகள் தங்கள் அபரிமிதமான ப்ரீதியைக் காட்டி அளவற்ற அன்பு புகட்டிவரு கின்றுர்களோ அந்த சிப்பந்திகள் அதற்குத் தகுந்தபடி அதிகாரி களின் கௌரவத்தையும் மதிப்பையும் சிறிதேனும் நிலைநாட்டி வைக்காமல் அதிகாரிகள் சொன்னதாக பல படியாக ஏற்றிட்டு வைத்து செய்யத்தகாத சின்னஞ்சிறு செயல்களை ஸ்ருஷ்டித்து விட்டு, இறுதியில் அதிகாரிகளை மஹத்தான ஆபத்தில் விட்டு, தாங்கள் நழுவி, அதுவும்போதாது எந்தக்கை வலுக்கிறதோ அங் கேயும் சேர்ந்து ஆடி அவ்விடத்திலும் ஏதாவது க்ருத்ரிமம் செய் யப் பார்ப்பார்கள். இவ்விஷயங்களை சிறிது காலத்திற்குள் எவ்



வளவோ ப்ரத்யக்ஷத்தில் பார்த்துவிட்டோம்; பார்த்துக்கொண் டிருக்கிறோம்; பார்க்கவும் போகிறோம்.

எப்படி யிருந்தபோதிலும் இறுதிவரை ஒரே கையில் நின்று போராடி துக்கமோ, சுகமோ, கஷ்டமோ, சந்தோஷமோ, லாப மோ, நஷ்டமோ எதையும் அநுபவிப்பது என்ற கொள்கையைக் கடைப்பிடித்து நிற்பவர் இக்காலத்தில் அபூர்வமாயினும் அப்படி சிரமப்படுவோர் ஓரிருவர் இருந்தாலும் அவர்கள் முறையே தக்க. காலத்தில் தள்ளப்படுவதும் ஸஹஜம். இக்காரணம் பற்றியே உலகத்தார் 'கரையான் புத்து வைக்க பாம்பு குடியேறிற்று' என்பது. இதனுல் ஒழுங்காகக் காரியம் பார்ப்பவர்களும் தக்க சமயத்தில் ஒதுங்கிக்கொண்டு விடுகிறுர்கள். ஆதனுல் எவ்வளவோ காரியங்கள் பரிபூரணமாக நடைபெற மாட்டாமல் தத்தளிக்க ஆரம்பித்துவிடுகிறது. ஆகையினுல் அப்படி யிருப்பவர்களிடம் ஒரு சமயத்திலாவது ஆதரவு காட்டி, விஷயங்களைச் சொன்னுல்தான் அவர்களுக்கும் ஒரு வித த்ருப்தி ஏற்படும். உழைப்பதற்கு ஒரு வன்; உண்பதற்கு ஒருவனு ?

இல்லையாகில், இறுதியில் வந்து ஆடுகின்றவர்களாவது ஆதி முதல் அந்தம்வரை அதிகாரிகளுடன் நின்று, உழைத்து, அலைந்து, திரிந்து நிற்பர்களோ வென்றுல் அது தான் அப்பேர்ப்பட்ட சிப் பந்திகளுக்கு எப்போதும் வழக்கமல்லவே !

ஆகையால் பொது ஸ்தாபனத்தில் உழன்று திரியும் அதிகாரி கள் யாராயிருந்தபோதிலும் அதிகாரிகள், சிப்பந்திகள் என்ற முறைப்படி ஏற்றத்துடனும் கௌரவத்துடனும் நிலை நிற்பர்களே யானுல் இவ்வித வீண் தகாறுகள் இடம் பெருது; அதிகாரிகளும் சமயங்களில் படுகுழியில் தள்ளப்படார்; எவருக்கும் எளிதில் காரியமாகும். எவருக்கும் எவ்வித சலுகையும் காட்டுதல் தகாது.

ஆதலால் அதிகாரிகள் யாராயிருந்தபோதிலும் தங்கள் பெய ருக்கேற்ப தங்களைத் தாங்களே நிர்பந்தப்படுத்திக்கொண்டு தீய வழியதனைத் தொலைத்து நலமிக்க நல் வழியிதனை நாடி நிற்பர்களே யாகில் அவர்களுக்கு எக்காலத்திலும் எவ்வித குறைவும் வாராது; எப்பொழுதும் அவர்களுக்கு ச்ரேயஸ்ஸே'உண்டு; உண்டு.

## இன்னமுமா அனுப்பப்பட வேண்டும்!

டாக்டர் ராஜன் 1937 ஜூலையில் கோயில் மந்திரியானர். கோயில் அதிகாரிகளான ஸ்தலத்தார், டிரஸ்டிகள், கமிட்டி மெம்பர்கள் இவர்களுக்கு தினந்தோறும் பெருமாளுடைய புஷ்பம் சந்தனம் அனுப்பப்படுவது ஒரு மரியாதை. கோயில் அதிகாரத்திற்கு இது ஒரு பாத்தியம்; வரும்படியும் கூட. இதுவரையில் ஸ்ரீரங்கத்துக்காரர் கோயில் மந்திரி பதவிக்கு வந்ததில்லையாகையால் அவருக்கு இந்த மரியாதை அனுப்பப்படவில்லை. டாக்டர் ராஜன்—ஸ்ரீரங்கத்துக்காரர் கோயில் மந்திரியானது பற்றி திருச்சி கண்டோண்மெண்டில் அவர் வீட்டில் தினந்தோறும் புஷ்பமும் சந்தனமும் கொடுக்க தர்மகர்த்தாக்கள் ஏற்பாடு செய்யாததும் தவறுகளில் ஒன்றல்லவா! அவர்கள் விலக்கப்பட்டவுடனே அவதார புருஷனாய் வந்த ஸ்ரீ. ராஜகோபால நாயுடு கோயில் மந்திரியான டாக்டருக்கு சரியாக மரியாதையைச் செய்தார். பலனையும் அடைந்தார். அதாவது புஷ்பமும் சந்தனமும் தினந்தோறும் அனுப்பப்பட்டதாம். இந்த மரியாதை தினந்தோறும் சுமார் ஆறு மைலுக்கப்பாலுள்ள திருச்சி கண்டோண்மெண்டிலுள்ள டாக்டர் ராஜன் வீட்டுக்குப் போகாமல் ஸ்ரீரங்கத்திலேயே இருக்கும் அவருடைய சொந்தக்காரர் ஒருவருக்கு அனுதினமும் வீட்டுக்கு அனுப்பப்பட்டு வந்ததாம். இந்த மரியாதை மந்திரி வேலை போய் ஏழெட்டு மாதமாகியும் இன்னும் அந்த டாக்டரின் உறவினர் ஒருவர்க்கு இன்றுவரை அனுப்பப்பட்டு வருகிறதாகத் தெரிகிறது. இக்காரியம் புது ஆபீஸருக்குத் தெரியாமலே பழைய ஆபீஸரின் கையாட்களால் இது நடக்கக் கூடுமென்று ஆலோசித்து புது ஆபீஸருக்கும் ஒரு நண்பர் எழுத்து மூலமாகவே தெரிவித்திருந்தாராம். ஐயோ, பாவம்! புது ஆபீஸர் பழைய மந்திரியின் மனஸ்தாபத்திற்கு ஆளாகிறாரோ? அல்லது பழைய மந்திரியின் மகிழ்ச்சிக்கு ஆளாகிறாரோ? அறிகின்றிலோம். யார் எப்படியாவது நினைக்கட்டும். டாக்டர் ராஜன் கோயிலுக்குச் செய்த பேருபகாரத்தை நினைக்கும்போது என்னென்று எண்ணுகிறீர்கள்! இவருக்கு இம்மரியாதை மட்டும் அனுப்பினல் போதுமா? இவர் செய்தருளிய செயற்கரியதான காரியத்திற்கு! ஐம்பது வருஷமானாலும் ஐந்து தர்மகர்த்தாக்களாலும் செய்ய முடியாத அரும்பெரும் கட்டட வேலைகளை (சரியான எஸ்டிமேட், ஸாங்கிஷன், கண்ட்ராக்டு முதலிய யாதொரு அபேக்ஷையுமில்லாமல் மஹா தைர்யத்துடன் ஸ்வேச்சையாகவே) ஒரே வருஷத்தில் செய்து முடித்தவர் ஸ்ரீ. நாயுடுவேயாவர் என்று தன்னைத்தானே மறைமுகமாகப் புகழ்ந்து கொண்டு, ஒன்றும் தெரியாத நாயுடுவுக்குப் பலமாயிருப்பதாக தைரியம் சொல்லிக் கொண்டே தான் இறுதியில் ஒதுங்கி, தன்னந்தனியே ஸ்ரீ. நாயுடுவை விட்டு விட்டு வேடிக்கை பார்க்கிறவனன்றோ இவர்!



## ஸ்ரீ. நாயுடுவுக்கு அனுப்புவது என்னவாயிற்று?

மாஜி மந்திரியின் உறவினர்க்கு கோயில் மரியாதை இன்னும் அனுப்புவது பற்றி அறிந்தவுடன் வியப்பை அடைந்தீர்களல்லவா? இதையும் உடனே தெரிந்து கொள்ளுங்கள். ஸ்ரீரங்கம் கோயில் எக்ஸிக்யூடிவ் ஆபீஸராயிருந்த ஸ்ரீ. ராஜகோபால நாயுடு மதுரூல் மதஸ்தாபன போர்டாரால் வேலையினின்றும் நீக்கப்பட்டு இன்றைக்கு எத்தனை மாதங்களாயிற்று என்பதை அறிவீர்கள். அவருக்கும் கோயிலுக்கும் இப்போது என்ன சம்பந்தம் என்பதை எல்லோரும் அறிவீர்கள். அவருக்கு இன்றும் கோயில் மரியாதைகள் எப்போதையும் போலவே கொண்டுபோய் கொடுக்கப்பட்டு வருகிறதாம். இது எந்த விதத்தில் நியாயம்? சட்டப்படிப்பில் தேர்ந்த ஸ்ரீ. பிள்ளையின் சட்டத்தில் இதற்கு விதி எப்படி இடம் அளிக்கின்றதோ? நாயுடுவுக்கு வேலை இல்லாவிட்டாலும்மரியாதைக்குக் குறைவில்லை; கௌரவத்திற்கும் அதிகாரத்திற்கும்கூட ஹானியில்லை. அது எப்படியென்று கேட்கிறீர்களா? அவர் தர்பாரில் சம்பந்தமில்லாத யார் யாருக்கோ யார் யார்க்காக விசேஷ மரியாதைகள் செலுத்தி வந்தாரோ அவர்களுக்கும் இந்தப் பிள்ளையின் ராஜ்யத்தில் குறையற்று குதூஹலத்துடன் நடந்து வருகின்றதனால் தான்.

இவைகளை யெல்லாம் எக்காரணம் கொண்டு செய்யப்பட்டு வருகின்றதோ? அறியாமையினலா? அனுதாபத்தினலா? அக்கரையினலா? அச்சத்தினலா? அச்ரத்தையினலா? அனுபவமில்லாமையினலா? அறிகின்றிலோம். இனியாவது இம்மாதிரி செயல்கள் அறவே யொழிக்கப்பட்டு இப்பொழுது அதிகாரம்

செலுத்திவரும் ஆக்டிங் ஆபீஸர் அதிகாரத்திற்கேற்ப தான் அடையவேண்டிய அம்மரியாதையை அடைவாரென நம்புகிறோம்.

மரியாதை என்பது வேலை பார்க்கிறவர்க்கே யன்றி வெறும் ஆளுக்கல்ல. இது கண்டு நாயுடுவுக்கு நம்மீது கோபம் ஏற்பட்டா லும் ஏற்படலாம். நாம் மரியாதையைக் குறித்து வ்யக்தியைக் காண்பிக்க வேண்டியிருக்கின்றதே யொழிய சொந்தமாக எவ்வித விரோதமும் எள்ளளவும் எவரிடத்திலும் கிடையாதென்பது திண் ணம்; திண்ணம்.

## இன்னும் கவனிக்கப்படவில்லை.

புது ஆபீஸரிடம் சிற்சில விஷயங்களை பிரஸ்தாபிக்கையில், அவர் அம்மாதிரி விஷயங்களை அவ்வப்பொழுது தெரிவிக்கும்படி கேட்டுக்கொண்டதை யாம் அன்புடன் இசைந்து எவ்வளவோ முறை எவ்வளவோ நல்ல விஷயங்களை நேரில் சொல்லியிருக்கி றோம். அவைகள் இதுகாறும் இன்னும் கவனிக்கப்படாமல் இருந்து வருகின்றன. ஆனால், அவர் என்ன செய்வார்? இப் போது சிறிது காலமாக புது ஆபீஸர் ஆக்டிங் ஆபீஸராக அமர்ந் திருக்கிறாரென்பதை உணரவேண்டும். அவருக்கு ஏற்கனவே இயற்கையான மறதி கொஞ்சம் உண்டு. அதிக வேலையைப் பார்க்கும் இத்தருணத்தில் அது இன்னும் அதிகமாகத் தான் ஏற் படும். அது காரணத்தினால் சில காரியங்கள் செய்யப்பெறாமல் நின்கின்றதேயன்றி அது காரியத்தைச் செய்யக்கூடாது என்ற முரட்டுப் பிடிவாதத்தினாலோ அல்லது யாதொருவித பயத்தி னாலோ அக்காரியங்கள் செய்யப் பெறாமல் நிற்கின்றன என்று இந்த ஸ்ரீ. மாதவன் பிள்ளை காலத்தில் துளிக்கூட எவரும் நினைக்க லாகாது.

இனி, அவ்விஷயங்கள் ஒருவாறு கவனிக்கப்படும் என்றே மறுமுறை ஞாபகமூட்டி விஷபசர்ச்சையில் இறங்காது இத்துடன் நிற்கின்றோம்.

## இவைகளில் தலையிட வேண்டாமே!

புது ஆபீஸரைப் பற்றி வெகுவாய்த் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. இவர் மிகவும் நல்லவர். செலவு அதிகம் செய்யமாட்டார். சில காரியங்களில் பயந்தவர் என்றுகூட சொல் லலாம். ஆனால் சிற்சில காரியங்களில் துணிச்சல் கூட உண்டு. இவர் இப்பொழுது ஆபீஸராயிருந்தும் முன்பு தனக்கு ஏற்பட்ட மானேஜர் உத்தியோகத்தைத் தான் பார்க்கிறார். ஆபீஸர் உத்தி யோகம் மிகக் குறைவாயும் மானேஜர் உத்தியோகம் அதிகமாயும் இருக்கிறது. தமக்கு நடுவாந்தரத்தில் கிடைத்த புது உத்தியோ கத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்காகவோ அல்லது ஸ்வபாவமாக ஏற்பட்ட நல்ல குணத்தினாலோ இவர் வஞ்சனை யில்லாமல் அதிக மாக பாடுபடுகிறதில் குறைவில்லை. தேவஸ்தானத்தில் பல துறை கள் உள்ளன. ஒவ்வொரு துறையிலும் தனித்தனி ஆட்கள் உண்டு. எல்லாம் சரியாக நடக்கும்படி ஆபீஸர் கவனிக்கவேண் டியது. எல்லாத் துறைகளிலுமுள்ள வேலையையும் ஆபீஸர் தானே தெரிந்து கொண்டு நடத்த முடியாது. ஆபீஸர் ஒவ்வொன் றையும் தெரிந்து கொள்ளும் வரையில் காரியம் காத்திராது. அவ ரவர்கள் செய்யும் வேலைக்குத் தம்மால் உபகாரம் இல்லாவிடினும் இடையூறு இல்லாமல் ஆபீஸர் தன்னை நடத்திக் கொள்ள வேண் டும். நேராக தேவஸ்தானத்தின் செலவிலோ அல்லது தேவஸ் தானத்தின் மூலமாக வேறொருவர் செலவிலோ நடக்கும் காரியங் கள் எல்லாவற்றையும் ஆபீஸர் மேல் பார்வை பார்த்துக் கொண்டு கெடுதல் இல்லாமல் பாதுகாக்க வேண்டியதே யொழிய வேலை நடப்பதற்கே வழியில்லாமல் செய்வதும், பல தடவை சொன்ன லும் நானே வந்து பார்க்கிறேன் என்று சாக்குச் சொல்லுவது மாக ஆபீஸர் சில வேலைகளில் தாமதம் செய்கிறாரெனத் தெரி கிறது. ஒரு வேளை நாம் இப்படிக் கடுமையாக எழுதுவது பற்றி நம்மை ஆபீஸர் தப்பாக நினைத்தாலும் நினைக்கலாம். ஆனால் ஆபீஸரை நாம் தப்பாக நினைக்கவில்லை. உள்ளதை உள்ளபடியே ஒளிக்காமல் உணர்த்துகின்றோமே யொழிய வேறு எவ்வித கார ணத்தினாலுமல்ல. ஒவ்வொரு வேலையையும் தாம் கவனிக்கவேண் டியதென்று இவருக்குள்ள அக்கரைக்குத் தக்கபடி இவரால் காரி யம் செய்ய முடியவில்லையே யென்று தான் நமது அனுதாபம்.

## கண்ணாடியறை.

ஸ்ரீரங்கம் கோயிலின் பெருமைக்கேற்ப கண்ணாடியறை இதுகாறும் அமையவில்லை. இது இந்தக் கோயிலுக்கு ஒரு

பெரிய குறைவு. இந்தக் கோயிலுக்கு கண்ணாடி வியாபாரம் போலேபல்லி திருவரங்கய்யா அவர்கள் ஸ்ரீபெரும்பூதூரில் கண்ணாடியறை கட்டி முடித்ததும் ஸ்ரீரங்கம் கோயிலில் கண்ணாடி யறையைக் கட்ட முயன்றார். அறையைப் பிரித்து, வெளிச்சம் முதலிய சௌகரியங்கள் அப்பொழுது இல்லாததால் காரியம் நடக்கவில்லை. இப்போது புதிதாக வந்திருக்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி கைங்கரிய விஷயங்களில் அபரிமிதமான ஆற்றலுடையவர் என்பது இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் காரப்பங்காடு, ஆழ்வார் திருநகரி, ஸ்ரீபெரும்பூதூர் முதலிய திவ்யதேசங்களில் ஆயிரக்கணக்கில் செய்து போந்ததிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். இப்போது இவ்விடத்திலும் அழகிய மணவாளனுக்கு கண்ணாடியறையை வெகு அழகாக நிருமிக்க வேணுமென்று சங்கல்பம் செய்திருக்கிறார். இந்தக் கைங்கரியத்திற்குக் குறைந்த பக்ஷம் சுமார் பதினாயிரம் ரூபாய் செல்லும். இம்மனோரதம் பரிபூரணமாய் நடைபெற எம்பெருமானும் ஸங்கல்பிக்க வேணும். அநேக தலங்களில் ஆயிரக்கணக்கில் அநாயாஸமாகச் செய்து போந்த இந்த ஸ்வாமி இக்கார்யத்தைச் செய்ய யத்தனிக்கையில் இக்கைங்கரியம் வெகு எளிதில் பூர்த்தியடையப்பெறும் என்பது நிஸ்ஸந்தேகம். எனினும் இதர ஆஸ்திக ஜனங்களும் இந்தக் கிரியையில் தங்கள் தங்களாலியன்றவரை வாக்ஸஹாயத்தினாலும், சரீர ப்ரயாஸையினாலும், திரவிய ஸஹாயத்தினாலும் பேருதவி புரிந்து கைங்கரியத்தைப் பூர்த்தி செய்து வைக்க வேணுமென்று நாமும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

## ஸ்ரீரங்கம் கோயில் கையாடல் கேஸ்.

ஸ்ரீரங்கம் கோயிலுக்கு எக்ஸிக்யூடிவ் ஆபீஸராயிருந்த ஸ்ரீ. இராஜகோபால நாயுடு கோயில பணத்தைக் கையாடல செய்ததாக போலீஸாரால் தொடரப்பட்டிருக்கும் கேஸ் திருச்சிராப்பள்ளி டிப்டி கலெக்டர் முன்பாக நாளது செப்டம்பர் மாதம் 11, 12, 13 தேதிகளில் அந்தநல்லூர் முகாமில் வாயிதா போடப்பட்டிருக்கிறதாகத் தெரிகிறது. அப்போது கோயில் உத்தியோகஸ்தர்களில் சிலர்கள் சாக்ஷிகளாக விசாரிக்கப்படுவார்களெனவும் தெரிகிறது.

**Edited, Printed and Published by Pandit S. M. Sundararajacharya at the Sri Vilasam Press, Srirangam.**

